உ

# இல்லக விளக்கு



M.அலமேலு ஆச்சி



அலமேலு சுந்தரம் அறநிலை
மதுரை

## அலமேலு சுந்தரம் அறநிலை

20, வடுகக் காவல் கூடத்தெரு
மதுரை – 625 001
தொலைபேசி எண் : 74 70 60



உறுப்பினர்கள்

S.செந்தில்நாதன் B.E.,

மீனாட்சி முத்துராமன் B.E.,

M.S.வெங்கடேஷ் B.E.,



பாசம் மிக்க குடும்பத்தைப்

பார்த்து வளர்த்த திருமகளே !

தேசு மிகுந்த அலமேலு

தெய்வத் தன்மை பெற்றவளே !

ஆசை எம்பால் உடையவளே !

அன்பால் எம்மைக் காப்பாற்றி

வாச மனையில் மல்லிகையாய்

மணக்க மீண்டும் வருவாயே !




14.08.1950 5.12.1998

5-6

# இல்லக விளக்கு

*இல்லக விளக்கது இருள்கெ டுப்பது*
*பல்லக விளக்கது பலரும் காண்பது*
*சொல்லக விளக்கது சோதி உள்ளது*
*நல்லக விளக்கது நமசி வாயவே*

என்பது அப்பரடிகள் தேவாரம். இல்லக விளக்கை ஏற்றவந்த என் மனைவி இப்பொழுது இல்லக விளக்காகவே மாறிவிட்டாள். பூரணயோகம் கண்ட **அரவிந்தர் மகா சமாதியான நாள் டிசம்பர் 5, (1950)**

***என் மனைவி இறைவன் திருவடியை அடைந்த நாள் டிசம்பர் (5), (1998) அவளுடைய இரண்டாம் ஆண்டு நினைவு நாளில்*** இந்தச் சிறுநூல் வெளிவருகிறது.

அவள் 14.8.1950ல் பிறந்தாள், 19 ஆண்டுகள் தாய் வீட்டில் வளர்ந்தாள். 29 ஆண்டுகள் என்னோடு வாழ்ந்தாள். இது போதும் என்று மறைந்துவிட்டாள்.

அவளோடு வாழ்ந்த 29 ஆண்டுகள் எனக்கு 29 நொடிகளாகப் பறந்துவிட்டன. அவள் மறைந்த பிறகு கடந்த இரண்டாண்டுகள் எனக்கு இருபதாண்டுகளாக நகர்கின்றன.

அவளுக்கு மனத்தில்பட்டதை மறைக்கத் தெரியாது. கள்ளம் கபடில்லை. கோபத்தில் யாரையாவது திட்டிவிட்டால் உடனே அதை மறந்து விடுவாள். யாராவது அவளைக் குறை கூறிவிட்டால் அவர்களிடம் எதிர்த்துப் பேசாமல் வந்து விடுவாள். என்னிடம் சொல்லி வருத்தப்படுவாள். பிறகு அதையும் மறந்துவிடுவாள்.

சின்னச் சிறு குருவிகள் இரண்டு. ஒவ்வொரு குச்சியாக எடுத்து வந்து கூடுகட்டின. குஞ்சு பொறித்தன. குஞ்சுகள் சிறகு முளைத்துப் பறந்து போயின. இரண்டு குருவிகளும் இனிமேல் "எனக்கு நீ உனக்கு நான்" என்று வாழத் தொடங்கும் போது பெண்குருவி மறைந்து விட்டது. ஆண் குருவி அயர்ந்து போய்க் கிடக்கிறது. இது தான் எங்கள் வாழ்க்கைச் சுருக்கம்.

துன்பம் அனுபவிக்கும் போது இன்பம் அனுபவித்த நாட்களை நினைப்பதைப் போன்ற துன்பம் வேறில்லை என்பதை நான் உணர்ந்தேன். அதே சமயம், துன்பங்களாகிய கருவிகளின் மூலம் இறைவன் நம்மை மேலான செயல்களுக்குத் தயார் செய்கிறான் என்றும் சான்றோர்கள் கூறக் கேட்டிருக்கிறேன்.

இந்த இரண்டு சிந்தனைகளுக்கும் நடுவில் இரண்டாண்டுகள் சென்றுவிட்டன. மனம் பழைய நிகழ்ச்சிகளை மறக்க மாட்டேன் என்கிறது.

எங்களுக்கு மூன்று குழந்தைகள். மூத்தவன் செந்தில்நாதன் அடுத்தது மீனாட்சி முன்றாவது வெங்கடேஷ். மூத்தவன் என்று அவனுக்குப் பெருமை. இளையவன் என்று இவனுக்குப் பெருமை. ஒரே பெண் என்று அவளுக்குப் பெருமை. என் மக்கள் மூவரும்

பொறியியல் பட்டதாரிகள் என்று என் மனைவிக்குப் பெருமை. என் மக்கள் இருவரும் உங்களை விட அதிகம் சம்பாதிக்கிறார்கள் என்று என்னிடம் பெருமையோடு கூறியவள் அந்தப் பெருமையோடு போய்ச் சேர்ந்துவிட்டாள்.

அவள் . . . . . .

தான் அதிகம் பேசாமல் என்னை அதிகம் பேசவைத்தவள்.

ஏட்டுப்படிப்பை எட்டுடன் நிறுத்தி வீட்டுப் படிப்புக்கு விளக்கம் கண்டவள்.

என் போக்கில் என்னைவிட்டு, பிடிக்க வேண்டிய இடத்தில் வசமாகப் பிடித்து, வாழ வைத்தவள்.

பிள்ளைகள் மீது கணக்கின்றிப் பொழிந்த பாசமழை

கணவனிடம் நகை வேண்டும் தொகை வேண்டும் என்று கேட்டுத் தொல்லைப்படுத்தாமல் கொடுத்ததை வாங்கிக் கொண்ட குடும்பத் தலைவி.

சபரிமலை யாத்திரை செய்யும் அன்பர்களுக்கு இருபத்தைந்தாண்டுகளாக இருமுடி கட்ட ஏற்பாடு செய்து எங்கள் வீட்டைக் கோயிலாக்கிய குலவிளக்கு.

மனத்தில் பட்டதை மறைத்துப் பேசாமல் அப்படியே சொல்லி அதன் விளைவுகளைச் சுமந்த சத்தியவதி

இருந்த காலமெல்லாம் இன்பத்தின் எல்லையைக் காட்டி பிரிந்த பொழுது துன்பத்தின் எல்லையும் தொட்டுக் காட்டிய இல்லத்தரசி.

இல்லதென் இல்லவள் மாண்பானால்? என்ற குறள் வரிகளுக்கு வாழ்வின் மூலம் விளக்கம் தந்த மனையரசி அவள் நினைவு என்றும் பசுமையாக நெஞ்சில் நிலைத்துவிட்டது.

---

ஒரு நாள் . . .

என் தாயும் என் மனைவியும் மதுரையில் எங்கள் வீட்டில் உரையாடுகிறார்கள்.

"இன்று என்ன சமையல் ?" என்று என்தாய் கேட்கிறாள்.

"அதை ஏன் கேட்கிறீர்கள்? இங்கே ஒவ்வொரு பிள்ளைக்கும் ஒவ்வொன்று பிடிக்கும். பெரிய பையனுக்குச் சாம்பார் பிடிக்கும் இளையவனுக்கு ரசமும் உருளைக்கிழங்கும் பிடிக்கும். இவர்களுக்கு ஏற்றபடி சமைக்க வேண்டும்" என்கிறாள் என் மனைவி

என் தாய் என்னைப் பார்த்துக் கேட்கிறாள் "ஏனப்பா ! உனக்கு என்ன பிடிக்கும் என்று சொல்லவில்லையே" என்று நான் பதில் சொல்லவில்லை. மனத்துக்குள் நினைத்துக் கொண்டேன் "எனக்கு என் மனைவியைத்தான் மிகவும் பிடிக்கும்" என்று.

கயாவுக்குச் செல்பவர்கள் தங்களுக்கு மிகவும் பிடித்தமானவற்றை விட்டுவிட்டு வரவேண்டுமாம். நான் கயாவுக்குப் போகு முன்னாலேயே எனக்கு மிகவும் பிடித்தவளை விட்டுவிட்டேன்.

**அவள் எங்கள் வீட்டு அன்னபூரணி**

யார் வந்தாலும் நிறையச் சமைத்து நிறையப் போடுவாள் வந்தவர் அதிகமாகச் சாப்பிட்டால் தான் அவள் மனம் மகிழும். இரண்டு முறை சாம்பார் வாங்கிச் சாப்பிட்டார் என்று மகிழ்வோடு சொல்வாள். அவள் பரிமாறினால் ஐந்து இட்லி சாப்பிடுபவர் ஏழு இட்லி சாப்பிடுவார். இல்லாவிட்டால் அவள் விடமாட்டாள்.

நான் அவள் இருந்தவரை காசிக்குச் சென்று அன்ன பூரணியைப் பார்க்கவில்லை. வீட்டிலேயே பார்த்துக் கொண்டிருந்தேன்.

நான் பல பெரிய மனிதர்களுக்கு மணி விழா மலர் வெளியிடும் போதெல்லாம், நமக்கு இப்படி ஒரு மணி விழா மலர் தயாரிக்க வேண்டும் என்று எண்ணினேன். ஆனால் என் மனைவியின் எண்ணம் வேறாக இருந்து விட்டது. தனக்கு மட்டும் ஒரு நினைவு மலர் தயாரிக்கட்டும் என்று அவள் என்னை முந்திக் கொண்டு விட்டாள்.

என் திருமணத்தின் போது எனக்கு என் மாமனார் வீடு தந்த பொருட்கள் பலவற்றை இன்னும் பத்திரமாகப் பாதுகாத்து வைத்திருக்கிறேன். இப்பொழுது அவை அனைத்தும் என்னைப் பார்த்துச் சிரிக்கின்றன. அட முட்டாளே! பாதுகாக்க வேண்டியவளைப் பாதுகாக்கத் தவறிவிட்டாயே என்று.

அவள் மறைவுக்குப் பின் என் வாழ்வு கண்ணீர்க் காவியம் ஆகிவிட்டது. ஊருக்குச் சிரிக்கின்றேன். உள்ளுக்குள் அழுகின்றேன். ஏன் அழுகிறேன் என்று எனக்கே புரியவில்லை அவள் மீது வைத்த பாசம் காரணமா? அல்லது அவள் இல்லாமல் நான்படும் துன்பத்தை நினைக்கும் சுயநலம் காரணமா? என்று பட்டிமண்டபம் வைத்தால் சாலமன் பாப்பையா கூடத் தீர்ப்புக் கூற முடியாது.

யார் யாருக்கோ கவிதை எழுதினேன். மணவிழாவுக்கும் மணி விழாவுக்கும், படிப்புக்கும், பதவிக்கும் பாராட்டுக் கவிதை எழுதினேன். ஆனால் அவளைப் பற்றி எழுதவில்லை. அதற்காகத்தான் என்னைவிட்டுப் பிரிந்து எழுதவைத்தாளோ? பிரிவும் துயரும் மிக நல்ல கவிதைக்குக் காரணம் என்று அவளுக்கு யார் சொன்னார்கள்?

வடக்குமாசி வீதிப்பிள்ளையாரை நாள்தோறும் சென்று வழிபடுவாள். பத்தொன்பது முறை வலம் வருவாள். ஏன் இவ்வளவு கும்பிடுகிறாய் என்று கேட்டால் எல்லோரும் நன்றாக வாழவேண்டும். நீங்களும் என் குழந்தைகளும்

நன்றாக இருக்கும்போதே நான் போய்விட வேண்டும். நீங்கள் இறந்து நான் இருந்தால் எனக்கு ஒன்றும் செய்யத் தெரியாது. என்னை எல்லோரும் ஏமாற்றி விடுவார்கள். எனவே நான் தான் உங்களுக்கு முன்னால் போக வேண்டும் அதற்குத் தான் பிள்ளையாரைச் சுற்றுகிறேன்" என்று கூறுவாள் அவள் வேண்டுதலைப் பிள்ளையார் இவ்வளவு சீக்கிரம் நிறைவேற்றுவார் என்று கனவிலும் நான் நினைக்கவில்லை.

" இறந்தவர்கள் பாக்கியம் செய்தவர்கள். இருப்பவர்கள் தான் துன்பப்படுகின்றோம்" என்று எழுதினார் ராஜாஜி அது எவ்வளவு உண்மை என்று இப்பொழுது தெரிகிறது.

மாணிக்கவாசகர் "பையவே கொடு போந்து பாசமெனும் தாழ் உருவி" என்று பாடினார். பாசத்தாழை இறைவன் பைய உருவினால் பரவாயில்லை. என் வாழ்வில் படாரென்று உருவிவிட்டான்.

உயர்ந்த நட்பும் உயர்ந்த காதலும் இரண்டும் ஒரே மாதிரியானவை. காலம் செல்லச் செல்ல இரண்டும் அதிக இன்பம் தரும். வாழ்வின் முற்பகலில் பொருள் தேடுதல், குழந்தை வளர்ப்பு எல்லாம் நம் நேரத்தை எடுத்துக்கொள்ளும். கடமைகளை நிறைவேற்றிய பிறகு, வாழ்வின் பிற்பகலில் கணவனுக்கு மனைவியும் மனைவிக்குக் கணவனும் தான் உதவியாகவும் உறவாகவும் இருப்பார்கள். தேவை அதிகமாகும் நேரத்தில் யார் பிரிந்து போனாலும் பெருந்துன்பம் தான்

இங்கு நீயொரு பாதி - நான் ஒரு பாதி - இதில்
யார் பிரிந்தாலும் வேதனை பாதி

என்று எழுதிய கண்ணதாசனுக்குக் கோயில் கட்டிக் கும்பிட வேண்டும். இது எவ்வளவு சத்தியமான வார்த்தை! ஒரு மனைவியோடு வாழ்ந்ததற்கு இப்படி ஒரு தண்டனையா?

சமையல் ஒழுங்காக அமையாவிட்டால் ஒருநாள் இழப்பு. அறுவடை சிறக்காவிட்டால் ஓராண்டு இழப்பு. திருமணம் பொருந்தாவிட்டால் வாழ்நாள் முழுவதும் இழப்பு. எனக்குப் பொருந்திய திருமணம் புகழையும் பொருளையும் தந்தது. அனுபவிக்க வேண்டிய காலத்தில் அனுபவிக்க முடியாமல் விதி விளையாடி விட்டது. வகுத்தான் வகுத்த வகை அப்படி. யார் மாற்ற முடியும்?

அவள் இருந்தவரை என் வாழ்க்கைக் கணக்கு மிக நன்றாக இருந்தது. நண்பர்கள் கூட்டப்பட்டார்கள். எதிரிகள் கழிக்கப்பட்டார்கள். மகிழ்ச்சி பெருக்கப்பட்டது. அன்பு வகுக்கப்பட்டது. அவள் மறைந்த பிறகு வாழ்க்கைக் கணக்கை எப்படிப் போடுவது என்று புரியாமல் தவிக்கிறேன்.

மனைவி இளமையில் காதலி, நடுவயதில் தோழி, முதுமையில் தாய். நல்ல மனைவியை விட உயர்ந்த வரமும் இல்லை; பொல்லாத மனைவியை விடப் பொல்லாத சாபமும் இல்லை. எனக்கு வரம் கொடுத்த இறைவன் அந்த வரத்தைப் பாதியிலேயே வாங்கிக் கொண்டுவிட்டான்.

வாழத் துடிக்கும் ஆசை முதியோர்க்கு இருப்பது போல் வேறு யார்க்கும் இருக்காது. இதுவரை எனக்கும் நீண்ட நாள் பயனுள்ள வாழ்க்கை வாழ வேண்டும் என்ற ஆசை இருந்தது. இப்பொழுது இன்னும் எத்தனை நாள் வாழ வேண்டுமோ என்ற அச்சம் உண்டாகிவிட்டது.

விளக்கில் இருக்கும் எண்ணெய் வற்றுகின்ற வரை விளக்கு எரிகிறது. வினைகள் தீரும் வரை மனித வாழ்வு உலகில் நிலைத்திருக்கிறது. இந்த உண்மை தெரிந்தாலும் பாசம் வைத்த மனம் பக்குவப்பட மறுக்கிறது.

நிஜம் நினைவாகி விட்டது. நினைவு நிஜமாகிவிட்டது. இல்லாள் அகத்திருக்க இல்லாதது ஒன்றில்லை. இந்தத் தொடர் இப்பொழுது புரிகிறது. அவள் இருந்தவரை அவள் பெருமை தெரியவில்லை. இப்பொழுது தெரிகிறது இதைப் படிப்பவர்களுக்குச் சொல்கிறேன். மனைவியை நன்றாக வைத்துக் கொள்ளுங்கள். அவள் கருத்துக்களுக்கு மதிப்பு கொடுங்கள். அதற்காகவே இதை எழுதுகிறேன்.

மனத்தை மறைக்கத் தெரியாமல் வார்த்தைகளில் கொட்டி இருக்கிறேன். கொஞ்சம் அதிகம் என்று நினைப்பவர்கள் என்னை மன்னிக்கட்டும்.

என் மனைவியின் மறைவுக்கு இரங்கல் தெரிவித்துப் பல சான்றோர்கள் நேரில் வந்தும், கடிதம் எழுதியும் எனக்கு ஆறுதல் கூறினார்கள். அந்த உயர்ந்த உள்ளங்களை வணங்கி நிற்கிறேன்.

இந்த நூலில் மகாகவி **அர.சிங்கார வடிவேலன்** அவர்களும் காப்பியக் கவிஞர் **மீனவன்** அவர்களும் எழுதிய இரங்கற்பாக்கள் இடம் பெற்றுள்ளன. இந்தப் பாடல்களின் மூலம் தமிழ்வாழும் வரை என் மனைவியின் பெயர் வாழ வைத்த அந்தப் பெருமக்களுக்கு என் நன்றி.

சான்றோர்களின் சிந்தனைகளும், வாழ்வாங்கு வாழ வழிகளும் தொகுக்கப்பட்டுள்ளன. படித்து, படித்தபடி நடந்து பயன் பெறுங்கள்.

பணிவுள்ள

*சொ.சொ.மீ.சுந்தரம்*

# கண்ணேறு பட்டதுவோ

ஆவியினை இழந்தவெறும் கூடாய் நிற்கும்
　　ஆருயிரே ! சொ.சொ.மீ ! பாதி யான
தேவியினைப் பறிகொடுக்கும் வகையில் நீயும்
　　செய்திருக்கும் தவறென்ன? தொண்டு தானே!
கோவிலுக்கும் தமிழுக்கும் கல்லூ ரிக்கும்
　　கொண்டநெறி தவறாமல் செய்து வந்தாய்
பாவி எமன் என் கண்ணில் படுவான் என்றால்
　　பாட்டென்னும் சோட்டாலே அடிப்பேன் அப்பா.

உண் நேரம் துயில் நேரம் தவிர மீதி
　　உன் நேரம் அத்தனையும் உழைக்கும் நேரம்.
கண்ணேறு பட்டதுவோ ? கையிழந்து
　　கவியேறு தவிப்பதுவும் நியாயம் தானா ?
முன்னேறும் வேகத்தைக் கண்டு வேலன்
　　முலையென்று போட்டானோ முட்டுக் கட்டை ?
உன் நேரம் அத்தனையும் ஊருக் கென்றே
　　ஒதுக்கென்றே மீனாட்சி சொல்கின்றாளோ ?

*ஒரு மகனும் ஒரு மகளும் மணக்கக் கண்டாள்*
*ஒலியமாம் இளையமகன் துணையாய்க் கூட்டும்*
*மருமகளைக் காணாமல் மறைய லாமா ?*
*மணவாளன் தனிமையிலே கரைய லாமா?*
*ஒரு மகளும் மருமகனும் வீடு வந்தால்*
*உன் முகத்தைக் காணாமல் ஏங்க லாமா?*
*அருமந்தப் பேரருக்கும் இனிமேல் வீட்டில்*
*அப்பத்தா ஆயாவும் அய்யா தானா?*

*பிறந்தவர்கள் இறப்பவர்கள் உலக நீதி*
*பிணைந்தவர்கள் பிரிவார்கள் கால ஓட்டம்.*
*சிறந்தவர்கள் நடுவயதில் துணையிழந்து*
*தேம்புவது சரிதானா? விளங்க வில்லை*
*மறந்திடுக சொ.சொ.மீ ! என்ன செய்ய ?*
*மற்ற பணி விரைகாலம் மறக்க வைக்கும்.*
*உரம் தருவாள் மீனாட்சி. முருகன் சொக்கர்*
*உன்னுயிராம் விநாயகரும் உதவு வாரே !*

மகாகவி அர.சிங்கார வடிவேலன்
கண்டனூர்

---

*Death is not life lessness*
*For life knows no death*
*Death is just a change*
*A change for growth and*
*Growth towards perfection*

*- Swami Chinmayananda*

# கை கொடுக்கத் தமிழுண்டு

அரியதமிழ்த் திருமுறை போல் பாக்கள் பாடும்
அன்புநண்ப சொ.சொ.மீ ! உனக்கே என்றும்
உரியதுணை அலமேலு சிவன் தன் பாதம்
உற்றதனைச் செய்தித்தாள் வழிய றிந்தேன்
பெரியதோர் துக்கம்தான். ஆல வாயின்
பெண்ணரசி மீனாட்சி நின்பால் காட்டும்
கருணையிலும் சோதனையா? தேற்றி வாழ்க !
கை கொடுக்கத் தமிழுண்டு கவலை மாற்று

உயிர் மெய்யில் மனம் வைத்த உன்னோ டிங்கே
ஓசையெனக் கலந்திருந்த உனது காதல்
மயில் இங்கு மறைந்த தென்ற செய்தி கேட்டு
மன வருத்தம் என்றாலும் விருத்தம் பாடி
உயிர்ப்பிக்கும் வலிநமது பாட்டுக் கில்லை
உளக்கவலை மாற்றிடுக உனது வம்சப்
பயிர்களுக்கே உற்றதுணை இனிமேல் நீதான்
பார்த்துக்கொள் மீனாட்சி பாது காப்பாள்

நண்பரே! சொ.சொ.மீ ! நல்ல மனையரசி
கண்ணாம் அலமேலு கங்கையான் - தண்ணடிகள்
சேர்ந்திடயான் துன்புற்றேன் செம்மான் அடிக்கண் நீ
சேர்ந்த மைதி கொள்க சிறந்து.

காப்பியக் கவிஞர். நா.மீனவன்

# எத்தனை நாள் இத்துன்பம்?

வீடுகட்டி வைத்திருந்தேன் விளக்காய் வந்தாள்
வெறுங்கையால் முழம் போட்டேன் பொருளைத்
தந்தாள்
பாடுபட்ட காலமெல்லாம் துணையாய் நின்றாள்
பயன்பழுக்கும் காலத்தில் பறந்து விட்டாள்
ஈடுகட்ட முடியாமல் இளைத்து விட்டேன்
இரு கண்கள் இருந்தாலும் குருடன் ஆனேன்
வாடிவிட்ட நெஞ்சத்தின் வருத்தம் மாற்ற
மறு பிறவி எடுத்தென்னைச் சந்திப் பாளா?

பலகாலும் என்துணையாய்ப் பார்த்துக் கொண்டாள்
பாவி எமன் வயிற்றுக்குள் நோயாய் வந்தான்
குலை நடுங்கி மருத்துவர் பால் கூட்டிப் போனேன்
கோர்த்த கையை எடுக்காமல் கூட வந்தாள்
தலையினிலே ஒருமுடியும் நரைக்க வில்லை
சரிபாதி வயதினையும் தொட்ட தில்லை
அலைகடலில் பெருங்கப்பல் கவிழ விட்டாள்
அவள் என்னைப் பார்த்தபடி மறைந்து விட்டாள்.




அவள்வந்த பின்னால்தான் வாழ்வு பெற்றேன்

அவள் தொட்ட கரத்தால்தான் தமிழைத் தொட்டேன்

அவள் சிரிப்பில் மீனாட்சி கருணை கண்டேன்

அவள் என்றும் இருப்பாள் என் றெண்ணி விட்டேன்

அவள் எனக்கு மனையாளாய் இல்லம் காத்தாள்

அன்னையைப் போல் எனைவளர்த்தாள் இன்று மட்டும்

அவள் என்னை விடுவாளா? விடவே மாட்டாள்

ஆர்வந்து தடுத்தாலும் அழைத்துச் செல்வாள்

பற்றாக முருகனையே பற்றிக் கொண்டாள்

பழனிக்கும் என்னோடு நடந்து வந்தாள்

உற்றார்க்கும் உறவுக்கும் விருந்து வைப்பாள்

உள்ளத்தில் பட்டதனை மறைக்க மாட்டாள்

மற்றெதற்கும் அவள் ஆசைப் பட்ட தில்லை

மல்லிகைப்பூச் சூடமட்டும் ஆசைப் பட்டாள்

பொற்றாலி கழுத்தினிலே பொலிந்து நிற்கப்

பூவோடும் பொட்டோடும் புகழைப் பெற்றாள்

அலமேலு என்றவளை அழைத்த தில்லை
அம்மா ! என் றழைத்துத்தான் பழகி விட்டேன்
இலை போட்டுப் பரி மாறிக் காத்திருப்பாள்
இரவெல்லாம் எனக்காக விழித்திருப்பாள்
பலகாலம் இருப்பாளென் றெண்ணி விட்டேன்
பாதியிலே கதை முடித்துப் பறந்து விட்டாள்
தலையில்லா உடம்பாகத் துடித்து விட்டேன்
தாயிழந்த கன்றாகத் தவிக்கின் றேன்நான்.

வித்தகனாய் எனைமாற்றித் தாயாய் நின்று
வேளைக்குச் சோறிட்ட கைகள் இல்லை
முத்துப்போல் சிரிப்பில்லை குழந்தை போல
மொழிகின்ற சொற்கள் இல்லை, மூன்றே நாளில்
அத்தனையும் போய்விடநான் அயர்ந்து விட்டேன்
அவள் நினைவால் அழுதழுதே ஓய்ந்து போனேன்
எத்தனை நாள் இத்துன்பம் சொக்க நாதா !
என் கணக்கைச் சீக்கிரமாய்ப் பார்ப்பாய் அப்பா.

சொ.சொ.மீ.சுந்தரம்

# சான்றோர் சிந்தனைத் தேன்துளிகள்

அன்பு என்பது தேன் போன்றது. அதை நுகரவரும் ஈ அதிலேயே ஒட்டிக்கொள்ளும். - காண்டேகர்

இறைவனைச் சந்திக்க எவர் நாடுகிறாரோ அவரைச் சந்திக்க இறைவனும் நாடுகிறான். - நபிகள் நாயகம்

எல்லோரையும் நம்பிவிடுவது ஆபத்து ஒருவரையும் நம்பாமல் இருப்பது பேராபத்து - ஓர் அறிஞர்

இறைவனே! தீய மனிதனிடமிருந்து என்னைக் காப்பாற்று அத்தீயவன் நான் தான். - புருக்ஸ்

பணக்காரன் கடவுளைத் தன் பணப்பையில் வைத்திருக்கிறான் ஏழை தன் இதயத்தில் வைத்திருக்கிறான். - டேவிட் ஹ்யூம்

சொர்க்கம் கேட்காமலே கிடைக்கும். கடவுளோ கேட்டால் தான் கிட்டுவார். - லவல்

மனிதரில் இருவகையுண்டு. சிலர் இருளில் விழித்திருக்கிறார்கள். சிலர் ஒளியில் தூங்குகிறார்கள். - கலீல் கிப்ரன்

ஒரு பாவத்தைச் செய்பவன் மனிதன் அதைக்கண்டு துக்கப்படுபவன் ஞானி. அதைப்பற்றிப் பெருமை பேசிக் கொள்பவன் பிசாசு. - புல்லர்

நாத்திக வாதம் மனிதனின் உள்ளத்தைக் காட்டிலும் அவன் நாக்கில் தான் அதிகம் உள்ளது. - பேகன்

ஆத்திகவாதி பயிரை வளர்ப்பதாக நினைத்துக் கொண்டு களையையும் வளர்க்கிறான். நாத்திகவாதி களையை எடுப்பதாகக் கூறிக்கொண்டு பயிரையும் வெட்டிவிடுகிறான்.

- குன்றக்குடி அடிகளார்.

சில புத்தகங்கள் வெறுமனே ருசி பார்க்கப் படவேண்டியவை சில விழுங்கப்பட வேண்டியவை. மிகச்சில புத்தகங்களே மென்று தின்று ஜீரணிக்கப்படவேண்டியவை. -பேகன்

தன்னைச் சரிப்படுத்திக் கொள்பவனே உலகைச் சரிப்படுத்தத் தகுதியானவன். -விவேகானந்தர்

தனக்குச் சரிப்படாத எதையும் அசட்டுத்தனம் என்று சொல்வதுதான் உலக வழக்கு. - காண்டேகர்

உன் நாவைக் காப்பாற்று நண்பனைக் காப்பாற்றுவாய்.

- பழமொழி

பசியால் வாடும் வயிறுகளுக்குக் காதுகள் கிடையாது.

- பழமொழி

நமக்குள் எத்தனை மிருகங்கள் இருக்கின்றன !

வஞ்சகம் செய்து சமயத்திற்கேற்ப மாறுபவன் நரி!

ஊக்கமில்லாமல் மனம் சோர்ந்து தலைகவிழ்ந்து உட்கார்ந்திருப்பவன் தேவாங்கு.

மறைந்திருந்து தீமை செய்பவன் பாம்பு.

அறத்திலும் புகழிலும் விருப்பமின்றி அற்பசுகத்தில் மூழ்கிக்கிடப்பவன் பன்றி.

சொந்த புத்தியின்றி மற்றவர் எண்ணப்படி நடந்து. அவர்கள் கொடுத்ததை வைத்து வயிறு வளர்ப்பவன் நாய்.

கண்ட கண்ட செயல்களுக்கெல்லாம் திடீர் திடீரென்று கோபம் கொள்பவன் வேட்டை நாய்.

அறிவினால் பெரும் பொருள்களைத் தேர்ந்தறியாமல் முன்னோர் சொன்னவற்றையே திரும்பத் திரும்பச் சொல்பவன் கிளிப்பிள்ளை.

மற்றவர் செய்யும் அநீதிகளைத் தடுக்க முயலாமல், தன் மந்த குணத்தால் பொறுத்துக் கொண்டிருப்பவன் கழுதை.

வீண் மினுக்கு மினுக்கி ஆரவாரம் செய்பவன் வான் கோழி.

அடுத்தவன் சொத்தைப் பிடுங்கி உண்பவன் கழுகு.

புதிய உண்மைகளை வரவேற்காமல், வெறுப்படைபவன் வெளிச்சத்தைக் கண்டு அஞ்சும் ஆந்தை.

கல்வியறிவற்றவன் மிருகம் கூட இல்லை. அவன் தூண். வாய்மையே பேசி அறவழி நின்று இறைவனை அறிய முயல்பவனே மனிதன். - மகாகவி சுப்பிரமணிய பாரதியார்

நம்மை மனிதர்களாக்குவது உதவிகள் அல்ல தடைகளே
வசதிகள் அல்ல - நாம்படும் துன்பங்களே - மாத்தியூஸ்

மனிதர்களை மூன்று வகையாகப் பிரிக்கலாம்

உலகில் செயல்களைச் செய்து காட்டுபவர் சிலர்

செய்து காட்டும் செயல்களைப் பார்த்துக் கொண்டிருப்பவர் பலர்
என்ன செயல் நடக்கிறது என்று அறியாமலே இருப்பவர்
மிகப் பலர். - பட்லர்

ஒரு பெண் பேசும் போது நீயும் பேசாதே புன் சிரிப்புப் போதும்.
ஆண்கள் தாங்கள் அறிவதாக எண்ணுவார்கள். பெண்கள்
அறிவார்கள். - கன்பூஷியஸ்

குணமுள்ள பெண் ஒருவன் கருத்தில் ஒளிவீசுகிறாள்
அறிவாளியான பெண் ஒருவன் மனத்தைக் கவர்கிறாள்
அழகான பெண் ஒருவன் கலையுணர்வை மயக்குகிறாள்
ஆனால் பரிவும் பாசமும் உள்ள பெண், அவனையே
ஆட்கொள்ளுகிறாள். - அரிஸ்டாட்டில்

தூய்மையான பெண்ணைவிடத் தூய்மையான பொருள் உலகில்
எதுவுமில்லை அதுபோலவே, தீமையான பெண்ணைவிடத்
தீமையான பொருளும் இல்லை. - யூரிபிடிஸ்

தங்களுக்குத் தெரிந்ததைப் பற்றி ஆண்கள் பேசுகிறார்கள். தங்களுக்கு மகிழ்ச்சி தருவதைப் பற்றியே பெண்கள் பேசுகிறார்கள். பெண்களைப் பெண்களாகவே வளர்க்க வேண்டும். அவர்களை ஆண்களாக வளர்ப்பது அவர்களுக்கும் கேடு. வளர்க்கிற நமக்கும் கேடு. - ரூஸோ

உலகிலேயே ஆற்றல் மிக்க நீர்வீழ்ச்சி எங்கே இருக்கிறது? அது பெண்களின் கண்ணில் இருக்கிறது. - மில்ளர்

பெண்ணை அழும்படி செய்யாதே. ஆண்டவன் அவள் கண்ணீரை அளந்து பார்ப்பான். - இஸ்ரேல் நாட்டுப் பழமொழி

காக்கைக்குக் கண்கள் இரண்டாயினும் ஒளியைத்தரும் கருவிழி ஒன்றேயாகும். அதுபோலக் கணவனுக்கும் மனைவிக்கும் உடம்பு இரண்டாயினும் உயிர் ஒன்றே. இன்ப துன்பங்கள் இருவருக்கும் ஒன்று போலவே வரும்.

- மாணிக்கவாசகர்

உங்களுக்கு வரும் மனைவி எப்படிக் கற்புள்ளவளாகவும் கபடமற்றவளாகவும் இருக்க வேண்டுமென்று விரும்புகிறீர்களோ, அவ்வாறே நீங்கள் இருக்க வேண்டும் என்று அவள் விரும்புவாள் என்பதை மறவாதீர்கள்.

- பேடன் பவல்

கடவுள் மனிதனுக்குக் கொடுக்கக் கூடியவற்றுள் சிறந்த பொருள் நல்ல மனைவிதான். அவள் நவரத்தினங்கள் நிறைந்த பெட்டி போன்றவள் அவள் குரல் ஒலி இசையினும் இனிது. - ஜெர்மி டெய்லர்

மிகவும் ஆராய்ந்து என் மனைவி நீடித்து உழைக்கக்கூடிய திருமண உடையைத் தேர்ந்தெடுத்தாள். நான் அதுபோலவே அவளைத் தேர்ந்தெடுத்தேன். - கோல்டு ஸ்மித்

எப்படியிருந்தாலும் திருமணம் செய்து கொள். நல்ல மனைவி வாய்த்தால் நீ மகிழ்ச்சியாக இருப்பாய் மோசமான மனைவி கிடைத்தாய் நீ ஞானியாவாய். - சாக்ரடீஸ்

உண்மையான மனைவி கணவனுடைய இல்லத்தில் அடிமை. இதயத்தில் அரசி. - ரஸ்கின்

இல்லற வாழ்வை வெற்றிகரமாக்க இருவர் தேவை. ஆனால் தோல்வியாக்க ஒருவரே போதும். - செர்வாண்டீஸ்

நல்லபெண்ணை மணந்திருப்பது வாழ்க்கைப்புயலில் ஒரு துறைமுகம் ஆகும். தீய பெண்ணை மணந்திருப்பது துறைமுகத்திலேயே புயல் வீசுவதாகும். - ஜே.பி.சென்

உங்கள் மகனுக்கு ஐந்து வயது ஆகுமட்டும் அவனை அரசனைப் போல் நடத்த வேண்டும். அடுத்த பத்தாண்டுகளுக்கு அவனை மாணவனைப் போல் நடத்த வேண்டும். அதன் பிறகு அவனை நண்பனைப் போல் நடத்த வேண்டும். - சௌராஷ்டிர நீதி

பெற்றோரை மதித்து நடந்து அவர்களுக்குத் தேவையான பணி விடைகளைச் செய்பவனே மகன். பெற்றோருக்குப் பணியாற்றும் பிள்ளைகளுக்கு எல்லா நலனும் உண்டாகும். ஒரு குறையும் நேராது. - கன்பூஷியஸ்

வீட்டை அழகாகக் கட்டி என்ன பயன்? வீட்டில் இருப்பவர்கள் நல்லவர்களாக இருக்க வேண்டாமா? அது தானே வீட்டுக்கு அழகு. - ஸிஸரோ

சண்டையில் முதலில் வாயை மூடுகிறவன் நல்ல குடும்பத்தில் பிறந்தவன். - ஹிப்ரு

ஒரு தகப்பனார் பத்துக் குழுந்தைகளைக் காப்பாற்றுகிறார் பத்துக் குழந்தைகள் ஒரு தகப்பனாரைக் காப்பாற்றுவதில்லை.
- இஸ்ரேல் பழமொழி

வீட்டில் இல்லாத பெண்ணுக்கும் மதிப்பில்லை.

பெண் இல்லாத வீட்டுக்கும் மதிப்பில்லை.

ஆண் அகலாக இருக்க, பெண் எண்ணையாக இருக்க, குழந்தைகள் திரியாக இருக்கக் குடும்பவிளக்கு சுடர்வீசுகிறது. - பாலஸ்தீன மொழி

தாயின் நல்ல குணங்களும் தந்தையின் கெட்ட குணங்களும் குழந்தைகளிடம் வருகின்றன. - டிக்கன்ஸ்

காலை நேரம் ஒரு நாளைக் காட்டும். குழந்தை பின்னால் வரும் மனிதனைக் காட்டும். - மில்டன்

பிள்ளைளைப் பெறுவதனால் தாய் தந்தையர் படும் துன்பங்களுக்கு ஈடு செய்யக் கருதி, பிள்ளைகள் அவர்களுக்கு நூறு ஆண்டுகள் பணி புரிந்தாலும் அந்தக் கடனிலிருந்து விடுபட முடியாது. பத்து ஆசிரியர் ஒரு குருவுக்குச் சமம். நூறு குருக்கள் ஒரு தந்தைக்குச் சமம். ஆயிரம் தந்தையர் ஒரு தாய்க்குச் சமம். - மனுநீதி

ஆறு முறை உலகத்தை வலம் வருதலாலும், பதினாயிரம் முறை காசி கங்கையில் நீராடுவதாலும், கோடி முறை சேதுக்கரையில் தீர்த்தமாடுவதாலும் கிடைக்கும் பலன், பெற்ற தாயை மனப்பூர்வமாக ஒருமுறை வணங்குவதால் வரும். - நீதி சாத்திரம்

நேர்த்தியான வீட்டுக்கு இணையான பள்ளிக்கூடம் இல்லை. நேர்மையான பெற்றோர்களுக்கு இணையான ஆசிரியர்களும் இல்லை. - காந்தியடிகள்

எல்லோருடைய இடத்தையும் தாய் வகிக்க முடியும். ஆனால் தாயின் இடத்தை யாரும் வகிக்க முடியாது. . - மெர் சாப்

உண்மையான உழைப்பினால் வாழ்வில் முன்னேறலாம். துருப்பிடிப்பதை விடத் தேய்வது நல்லது. - கம்பர் லாண்டு

புற்கள் நீரில் மிதக்கும். முத்து வேண்டுவோர் நீரில் மூழ்கி உழைத்துத்தான் எடுக்க வேண்டும். - டிரைடன்

மின்மினிப்பூச்சி பறக்கும் போது பளபளக்கிறது. மனிதன் உழைக்கும் போது பளபளக்கிறான். - பெய்லி

ஆண்டவன் ஆடையை அளிக்கவில்லை ஆனால் நூற்பதற்குப் பஞ்சு கொடுத்திருக்கிறார். - ஜெர்மானிய மொழி

நடந்தால் ஸ்ரீதேவி இருந்தால் மூதேவி; நடந்தால் நாடெல்லாம் உறவு படுத்தால் பாயும் பகை. - இந்தியப் பழமொழி

கடவுள் உன்குலத்தையும் சாதியையும் கேட்கமாட்டார். என்ன செய்தாய் என்றுதான் கேட்பார். - நபிகள் நாயகம்

நாம் செய்யும் செயல்களை முடிவு செய்கிறோம். நாம் செய்யும் செயல்கள் நம்மை இத்தகையவர் என்று முடிவு செய்கின்றன.
- வெர்ன்ஸ்

செய்யத் தெரிந்தவன் சாதிக்கிறான். செய்யத் தெரியாதவன் போதிக்கிறான்.
- பெர்னாட்ஷா

இயற்கையின விதிகளை மீறுவதற்கு. அது அளிக்கும் தண்டனைதான் நோய்.
- சிம்மன்ஸ்

நள்ளிரவுக்கு மேல் விழித்திருக்கும் ஒவ்வொரு மணி நேரமும் சவப்பெட்டியை மூடும் ஆணியாகும்.
- இங்கிலாந்துப் பழமொழி

வயிறு புடைக்க உண்பவன் தன் பல்லாலேயே தன்புதைகுழியைத் தோண்டுகிறான்.
- ரஷ்யப் பழமொழி

சாதாரணப் பொருட்கள் மண்ணாலும் தண்ணீராலும் சுத்தமாகின்றன. தரை பெருக்குவதால் சுத்தமாகிறது. ஆறு வேகத்தால் சுத்தமாகிறது. மனம் உண்மை பேசுவதால் சுத்தமாகிறது.
- தர்மசாரம்

உங்கள் உள்ளம் எரிமலையாக இருக்குமானால் உங்கள் கைநுனிகளில் மலர்கள் மலர வேண்டும் என நீங்கள் எதிர்பார்க்க முடியாது.
- கலீல் கிப்ரன்

முடிவு செய்ய - மனம் ; வழி வகுக்க - அறிவு ; செய்து முடிக்க - கை இதுவே வெற்றியின் ரகசியம்.

- எட்வர்டு கிப்பன்



மனம் ஒரு நல்ல வேலைக்காரன். ஆனால் மோசமான முதலாளி
= சாக்ரடீஸ்

நீதிமன்றங்களைக் காட்டிலும் உயர்ந்த நீதிமன்றம் ஒன்று உள்ளது அதுதான் மனச்சாட்சி என்பது.
= காந்தியடிகள்

நான் போப்பாண்டவருக்கும் அவருடைய திருத்துணைவர்களுக்கும் அஞ்சுவதை விட என் நெஞ்சுக்கு அதிகம் அஞ்சுகிறேன். என்னுள்ளே ஒரு பெரிய போப் பாண்டவர் இருக்கிறார். அவரே மனச்சான்று.
= லூதர்

மரத்தின் பொந்துகளில் தேன் கூடு இருக்கிறது. நம் இதயக் குகையில் ஈசன் என்னும் ஆனந்தத் தேன் இருக்கிறது.
= ஞான ரத்நாவளி

மனிதனுடைய இதயம் ஊமையாய் இருந்தாலன்றிக் கடவுள் ஒரு நாளும் செவிடாய் இருப்பதில்லை.
= குவாரல்ஸ்

ஒரு நாடு வலிமையுறுவது சிறிய எண்ணங்களைக் கொண்ட பெரிய மனிதர்களால் அன்று. பெரிய எண்ணங்களைக் கொண்ட சிறிய மனிதர்களாலேயே.
= இராமதீர்த்தர்

சிந்திக்காதவன் முட்டாள். சிந்திக்கத் துணியாதவன் கோழை. சிந்திக்க மறுப்பவன் பிடிவாதக்காரன்.
= பிரியர்ண்ட்

பேசப்போகும் எல்லாவற்றையும் நன்றாக யோசி. ஆனால் யோசிப்பதை எல்லாம் பேசி விடாதே.
= டெலானி

அதிகம் பேசுவதால் ஒருவன் பண்டிதனாகமாட்டான் பேசுவது போல் வாழாதவன் பேச்சு மணமற்ற மலர். - புத்தர்

வாய்க்குள் போகிற எதுவும் மனிதனை அசுத்தப்படுத்தாது. ஆனால் வாயினின்றும் புறப்படும் வீண் பேச்சு மனிதனை அசுத்தப்படுத்தும். - இயேசுநாதர்

பேசாத வார்த்தைக்கு நீ முதலாளி. பேசின வார்த்தை உனக்கு முதலாளி. - இங்கிலாந்து மொழி

கெட்ட நண்பனின் நாக்கு கத்தியை விட அதிக ஆழமாய் அறுக்கும். - ஸ்பெயின் நாட்டு மொழி

மூன்று அங்குலமுள்ள நாக்கினால் ஆறு அடி மனிதனைக் கூடக் கொல்லமுடியும். - ஜப்பான் மொழி

குளிக்கும் போது பேசுகிறவன் சக்தியை வருணன் எடுத்துக் கொள்கிறார் வேள்வி செய்யும் போது பேசுகிறவன் செல்வத்தைத் தீக்கடவுள் எடுத்துக் கொள்கிறார். சாப்பிடும் போது பேசுகிறவன் ஆயுளை எமன் எடுத்துக்கொள்கிறார்.

- மனுநீதி

ஒருநாளும் காட்டிக் கொடுக்காத நண்பன் மௌனம்.

- கன்பூஷியஸ்

எறும்பைப் போல் உபதேசிப்பவர் யாருமில்லை. ஆனால் எறும்பு பேசுவதே இல்லை. - பிராங்ளின்

நீ விரும்புவதைச் செய்வது இன்பமல்ல. நீ செய்வதை விரும்புவது தான் இன்பத்தின் ரகசியம். - ஜேம்ஸ்பார்க்

எப்பொழுதும் ஏதேனும் ஒரு பணியில் ஈடுபட்டிருப்பதே இன்பம் ஆகும். இன்பம் தேங்கிக் கிடக்கும் குட்டையன்று ஓடிக்கொண்டே இருக்கும் நீர் ஊற்று. - ஹீட்

வயது செல்லச் செல்லத் தோல் சுருங்குகிறது. மகிழ்ச்சியை விட்டு விட்டால் வாழ்வே சுருங்கி விடுகிறது. - சாமுவேல்

ரோஜாச் செடியில் முள் இருக்கிறதே என்று குறைப்படாதே முள்செடியிலும் அழகிய மலர் இருக்கிறதே என்று மகிழ்ச்சி கொள். - ஆவ்பரி

பகைவர்கள் எதிரில் உன் துக்கத்தைக் காட்டாதே. அது கழுகுகளுக்கு மாமிசம் போடுவது போன்றது. நண்பர்கள் நடுவில் உன் துக்கத்தைக் கொட்டு. அது குளிர்ந்த நீரில் நெருப்பைப் போடுவது போன்றது. - அர்த்த சாஸ்திரம்

துன்பங்கள் தொடர்ந்து வரும். கால் இல்லாதவன் மீது அடிவிழும். சோறில்லாத போது பசி அதிகமாக இருக்கும். ஆபத்துக் காலத்தில் எதிரிகள் தோன்றுவார்கள். ஆறுகளுக்கு உப்பு நீரில் முடிவு. ரகசியத்திற்கு வம்பளப்பவர்களால் முடிவு. நல்ல குடும்பங்களுக்கு கெட்ட பிள்ளைகளால் முடிவு. - பஞ்ச தந்திரம்

துன்பப் பறவைகள் உங்கள் தலைக்குமேல் வந்து வட்டமிடுவதை நீங்கள் தவிர்க்க முடியாது. ஆனால் அவை உங்கள் தலைமேல் உட்கார்ந்து கூடிகட்டிக் கொள்ளாமல் நீங்கள் தடுக்க முடியும். - கன்பூஷியஸ்

அழுகின்ற கண்களில் தான் கடவுள் தன்மை பூரணமாகப் பொலிகிறது. - எட்வர்டு

மனம் ஒரு கண்ணாடி. கவலை அதில் படியும் அழுக்கு. நகைச் சுவை அந்த அழுக்கைப் போக்கும் தண்ணீர்.

- மகாகவி ஜாமி

நாம் விருந்துக்குப் போகும் போது உடுத்த வேண்டிய சிறந்த உடைகளில் முக்கியமானது நகைச்சுவை உணர்ச்சி.

- தாக்கரே

சான்றோன் ஆக்காத கல்வி, சாமர்த்தியமாகக் கழித்த சோம்பலே ஆகும். - போலிங் புரூக்

போதிப்பவர் எல்லாம் ஆசிரியர் இல்லை. யாரிடம் கற்றுக் கொள்கிறோமோ அவர்தான் ஆசிரியர். - கதே

புத்தகங்களை இரவல் கொடுக்காதீர்கள். யாரும் அவற்றை திருப்பிக் கொடுப்பதில்லை. என் நூல் நிலைத்தில் உள்ள புத்தகங்கள் எல்லாம் பிறரிடமிருந்து இரவல் வாங்கியவையே ஆகும். - அனடோல் பிரான்ஸ்

இந்தியப் பேரரசை இழக்கிறாயா அல்லது ஷேக்ஸ்பியரை இழக்கிறாயா என்று கேட்டால் இந்தியாவை இழக்கவே சம்மதிப்பேன். இந்தியா இல்லாமல் நாம் இருக்கலாம். ஆனால் ஷேக்ஸ்பியர் இல்லாமல் இருக்க முடியாது. இந்தியப் பேரரசு என்றேனும் ஒரு நாள் போய்விடும். ஆனால் ஷேக்ஸ்பியர் எப்போதும் நம்மோடு இருப்பார்.

- கார்லைல்

இசையில் ஈடுபட்டு இசைபாடி வாழ்பவனுக்கு மனைவி தேவையில்லை. இசைக் கருவியே அவன் மனைவி. அதிலிருந்து எழும் நாதமே அவன் குழந்தை.

- பாலஸ்தீனப் பழமொழி

நாம் படிக்கப் படிக்க நம்மிடமிருக்கும் அறியாமையைக் கண்டு கொள்கிறோம். - ஷெல்லி

அறிவைத் திரட்டுவதற்குப் போடுகின்ற முதலைப்போல, அதிக வட்டி தருவது வேறு எதுவும் இல்லை. - பிராங்க்ளின்

கடன் , நெருப்பு, வியாதி , இவற்றைச் சிறிது கூட மிச்சம் வைக்காமல் முழுவதுமாகத் தீர்த்துவிட வேண்டும்.

- பஞ்ச தந்திரம்

பிறரை அறிபவன் அறிவாளி. தன்னை அறிபவன் பெரிய அறிவாளி. அறிபவர் பேசார். பேசுபவர் அறியார்.

- லா வோட் சே

எத்தனை வயது என்ன தலைவிதி எவ்வளவு சொத்து எங்கே இறப்பு, எவ்வளவு கல்வியறிவு இந்த ஐந்தும் ஒருவர் கருவில் இருக்கும்போதே தீர்மானிக்கப்படுகின்றன. தன் வந்திரியே வைத்தியனாக வந்தாலும் ஆயுள் பலமில்லாதவனைப் பிழைக்க வைக்க முடியாது. நூறு மைல் தூரத்தில் மாமிசம் இருப்பதைப் பறவை பார்த்துவிடும். ஆனால் அதே பறவை, காலம் வந்து விட்டால், வேடன் விரித்த வலையையும் பார்க்காது. இது தான் விதி.

- பஞ்ச தந்திரம்

தூக்கு மேடை ஏறுவதும், திருமணம் செய்து கொள்வதும் விதியினால் ஏற்படுபவை. - ஷேக்ஸ்பியர்

எமனுக்கும் காமனுக்கும் மிகுந்த வேறுபாடு உண்டு. எமன் பிரியமற்றவனைப் போலிருந்து நன்மை செய்கிறான். காமன் பிரியமுள்ளவனைப் போலிருந்து தீமையைச் செய்கிறான்.

- ஆதி சங்கரர்

கடவுள் உங்களை நேசிக்கிறார். அதனால் தான் நீங்களும் அவரை நேசிக்க முடிகிறது. - சுவாமி சிவானந்தர்

நாம் ஒருபொழுதும் அனுபவிக்க முடியாத துன்பம் "மரணம்" ஒன்றே. நாம் உள்ளபோது மரணம் இல்லை. மரணம் வரும்போது நாமில்லை. - கிரேக்க ஞானி

வேதத்தின் சாரம் உண்மை. உண்மையின் சாரம் அடக்கம். அடக்கத்தின் சாரம் மோட்சம். - வியாசர்

இரண்டு மனிதர்களால் இவ்வுலகுக்குப் பயன் இல்லை. ஒருவன் பணத்தைச் சேர்த்துப் பூட்டிவைப்பவன் மற்றொருவன் படித்துப் பயன்படுத்தாமல் இருப்பவன்.

- சா அதி

ஆகாயத்தில் உள்ள விண்மீன்களைப் பார்த்து உன் கப்பலைச் செலுத்து ஆனால் கீழே இருக்கும் மணலை மறந்து விடாதே. - ஸ்பார்ஜியன்

உலகம் ஒரு கண்ணாடி. நாம் நகைத்தால் அது நகைக்கும். நாம் முகம் சுளித்தால் அதுவும் முகம் சுளிக்கும்.

- ஆவ்பரி

தன்னைக் குலுக்கும் கரங்களில் மலர்களைக் குவிக்கும் மரத்தைப் போல் இருங்கள். வாழ்வு சிறக்கும்.

- ஜப்பானிய மொழி

உன் நாக்கையும் பணப்பையையும் அதிகமாகத் திறக்காதே. அப்போது தான் உன் மதிப்பும் செல்வமும் வளரும்.

- பாரசீக மொழி

சொர்க்கமாகிய ஆனந்தம், நரகமாகிய துன்பம் இரண்டும் இந்த உலகத்தில் தான் இருக்கின்றன - காஞ்சிப் பெரியவர்

சுடுமொழிகள் பேசுவதால் உன் இயல்பே கடுமையானதாக மாறுகிறது. ஒரு தூய லட்சிய வாழ்க்கை வாழ நீ ஏன் நினைக்கக் கூடாது. - சாரதாமணி அன்னையார்

அறிவைத் தந்தையாகவும் போதும் என்ற எண்ணத்தை தாயாகவும் சத்தியத்தைச் சகோதரனாகவும் வைத்துக்கொள். இந்த உறவினர்கள் உன்னை ஒரு போதும் கைவிடாமல் காப்பாற்றுவார்கள். - மகாபாரதம்

நான் எப்பொழுதாவது சொர்க்கத்துக்குச் செல்ல நேர்ந்தால், அங்கே மூன்று அதிசயங்கள் காண்பேன். முதலாவது, அங்கே இருக்க மாட்டார்கள் என்று நான் கருதிய சிலர் அங்கே இருப்பார்கள். இரண்டாவது அங்கே இருப்பார்கள் என்று நான் கருதிய சிலர் இருக்க மாட்டார்கள். மூன்றாவது அதிசயம் நான் அங்கே இருப்பது. - ஜான் நியூட்டன்

இதோ ஓர் உபதேசம். நீ உபதேசம் பண்ணாதே !

- எவர்ஹார்டு

## வாழ்வாங்கு வாழ வழிகள்

நீங்கள் யார், உங்கள் ஆற்றல் என்ன, என்பதை நீங்களே அறிந்து கொள்ளுங்கள்.

அளவுக்கதிமாகப் பேசாதீர்கள். வாய், பேசமட்டுமல்ல பேசாமல் இருப்பதற்கும் தான் என்பதை உணர்ந்து கொள்ளுங்கள்.

நீங்களே பேசிக் கொண்டிருக்காதீர்கள். மற்றவர் கருத்துகளுக்கு மதிப்பளித்து அவர்களையும் பேச விடுங்கள்.

கோபம் வரும் போது வாயை மூடிக்கொள்ளுங்கள்.

குறித்த நேரத்தில் அளவோடு சாப்பிடுங்கள்.

எல்லாச் செயல்களையும் நீங்களே செய்ய வேண்டும் என்று நினைக்காதீர்கள்.

திட்டமிட்டுச் செயலாற்றுங்கள்.

முரட்டுப் பேச்சையும் முரட்டுத்தனமாக நடப்பதையும் விட்டு விடுங்கள்.

வீட்டில் மனைவி மக்களோடு உரையாடி மகிழவும், ஒன்றாக அமர்ந்து உண்ணவும் நேரம் ஒதுக்குங்கள்.

உண்மைகளை யார் சொன்னாலும் ஒப்புக் கொள்ளுங்கள்.

எல்லாவற்றையும் மனத்துக்குள் பூட்டி வைக்காதீர்கள். பிறரோடு கலந்து பேசிச் செயல்படக் கற்றுக் கொள்ளுங்கள்.

உடம்பில் நோய்க்குறிகள் தோன்றினால், உடனே மருத்துவரைச் சந்தியுங்கள். நாளைக்குப் பார்க்கலாம் என்று ஒத்திப் போடாதீர்கள்.

சிந்தித்து முடிவு செய்யுங்கள். அதன் பிறகு குழம்பாதீர்கள்.

தகுந்த காரணமில்லாமல் எச்செயலையும் ஒத்திவைக்காதீர்கள்.

இறைவன் திருவடியில் தலைவைத்துப் படுத்திருக்கிறோம் என்ற எண்ணத்தோடு போதுமான அளவு தூங்குங்கள்.

ஒரு துன்பம் ஏற்பட்டால் வாழ்க்கை இத்துடன் முடிந்துவிட்டது என்று சோர்ந்து போகாதீர்கள். ஒரு கதவு சாத்தப்படும்போது இன்னொரு கதவு திறக்கப்படும் என்பதை உணர்ந்து கொள்ளுங்கள் விழுவதெல்லாம் எழுவதற்காகவே என்பதை நினையுங்கள்.

நான் நான் . என்று நினைப்பதையும் பேசுவதையும் விட்டுவிடுங்கள். விட்டுக் கொடுத்துத் தோற்றுப் போவதில் உள்ள சுகம், வீம்பு பேசி வெற்றி காண்பதில் இல்லை என்பதை உணர்ந்து கொள்ளுங்கள்.

நீங்கள் மற்றவர்களுக்குச் செய்யும் சிறிய செயல்களுக்குப் பெரிய அன்பளிப்புகளை எதிர்பார்க்காதீர்கள்.

நடந்து முடிந்த செயல்களையே நினைத்துக்கொண்டிருக்காதீர்கள். நடப்பவை நல்லவைகளாக இருக்கும் என்றெண்ணுங்கள்.

நீங்கள் பேசும் பேச்சும் உங்கள் நடத்தையும் மற்றவர்களை எப்படிப் பாதுகாக்கும் என்று நினைத்துப் பாருங்கள். அதன் பிறகு பேசுங்கள்.

எதையும் நான் செய்கிறேன் என்று எண்ணாதீர்கள். இறைவன் செயலுக்கு நாம் கருவி என்பதை உணர்ந்து கொள்ளுங்கள்.

பொழுதைப் போக்குவதற்காகத் தொலைக்காட்சிப் பெட்டிக்கு முன் உட்காராதீர்கள். பொழுது, போனால் வராது என்பதைப் புரிந்து கொள்ளுங்கள்.

நல்ல நூற்களைச் சொந்தமாக வாங்கிப் படியுங்கள். எறும்பு ஊரக் கல்லும் தேயும். படிக்கப் படிக்கப் பக்குவம் கிடைக்கும்.

தவணை முறையில் பொருள் வாங்கி, நாளைய வருமானத்தை இன்றே செலவு செய்யாதீர்கள்.

வாய்விட்டுச் சிரியுங்கள். நோய் விட்டுப் போகும்.

செய்த பாவச் செயல்களை மற்றவர்களிடம் கூறுங்கள். அது பாதியாகிவிடும். செய்த புண்ணியச் செயல்களை அடுத்தவர்களிடம் கூறாதீர்கள் அதுவும் பாதியாகிவிடும்.

பெற்ற பிள்ளைகளுக்குப் பணத்தைக் கொடுத்துவிட்டுப் போவதைவிட, நல்ல பழக்கங்களைக் கொடுத்து விட்டுப் போவது சிறப்பு என்பதை நினைவில் கொள்ளுங்கள்.

வயதுவந்த மகனை நண்பனாக நடத்துங்கள். அவன் கருத்துக்களுக்கு மதிப்பு கொடுங்கள்.

தாயும் தந்தையும் தான் குழந்தையின் ஆற்றல் மிக்க ஆசிரியர்கள் என்பதை மறக்காதீர்கள். குழந்தைகளுக்கு முன்னால் சண்டை போடாதீர்கள்.

வயதான தாய் தந்தையரை அன்போடும் பாசத்தோடும் பாதுகாத்து வாருங்கள். உங்கள் பிள்ளை உங்களுக்கு இதைத்தான் செய்யப் போகிறது.

மற்றவர் குணங்களை விமர்சனம் செய்வதைக் குறைத்துக் கொள்ளுங்கள்.

நல்ல நண்பர்களைத் தேடி அடையுங்கள். நல்ல நூற்களும் நல்ல நண்பர்களுமே நம் வாழ்க்கைச் சக்கரத்தைப் பாதுகாக்கும் அச்சாணிகள்.

**தயவுசெய்து, இத்தனையையும் படித்து விட்டு மறந்து விடாதீர்கள் முடிந்த வரை பின்பற்றி முன்னேறுங்கள். வளமுடன் வாழுங்கள்.**

உ
முருகா



# ஸ்ரீ திருப்புகழ் சபை

தெற்காடி வீதி, மதுரை

## திருமதி அலமேலு ஆச்சி நினைவு இலக்கியப் பேருரை

பரவைக் கெத்தனை விசைதூது பகரற் குற்றவர் எனமாணுன்
மரபுக் குச்சித ப்ரபுவாக வரம்மெத் தத்தர வருவாயே
கரடக் கற்பகன் இளையோனே கலைவிற் கட்குற மகள் கேள்வா
அரனுக் குற்றது புகல்வோனே அயனைக் குட்டிய பெருமாளே.

– திருப்புகழ்

பேரன்புடையீர்! வணக்கம்

நம் திருப்புகழ் சபையில் அலமேலு சுந்தரம் அறநிலையின் சார்பில் **திரு.சொ.சொ.மீ.சுந்தரம்** அவர்கள் மனைவி **திருமதி அலமேலு ஆச்சி நினைவு இலக்கியப் பேருரை** 12.12.2000 செவ்வாய்க்கிழமை மாலை 7 மணிக்கு நிகழவிருக்கிறது. தமிழாகரர் செம்மல் **சுப.அண்ணாமலை** அவர்கள் தலைமையேற்க, கலைமாமணி தமிழறிஞர் **சு.சாலமன் பாப்பையா** அவர்கள் **"குறள் காட்டும் பெண்மை"** என்ற தலைப்பில் இலக்கியப் பேருரை ஆற்றுகிறார்கள்..தாங்கள் வருகை தந்து சிறப்பிக்க வேண்டுகிறோம்.

### நிகழ்ச்சி நிரல்

நாள் : 12.12.2000 செவ்வாய்க்கிழமை மாலை 6.30
இடம் : ஸ்ரீ திருப்புகழ் சபை

| | |
|---|---|
| மாலை 6.30 மணி | திருப்புகழ் பஜனை |
| இரவு 7.20 மணி | வரவேற்புரை |
| இரவு 7.30 மணி | தலைமை உரை<br>'தமிழாகரர் செம்மல்' சுப.அண்ணாமலை |
| 7.50 மணி | இலக்கியப்பேருரை<br>கலைமாமணி தமிழறிஞர் சு.சாலமன் பாப்பையா<br>பொருள் : **குறள்காட்டும் பெண்மை** |
| இரவு : 9.05 மணி | நன்றியுரை |



அன்புடன் அழைக்கும்
S.செந்தில்நாதன் - சேதுக்கரசி
M.மீனாட்சி - முத்துராமன்
M.S.வெங்கடேஷ் - லெட்சுமி
அலமேலு சுந்தரம் அறநிலை, மதுரை

அன்புடன்
ஸ்ரீ திருப்புகழ் சபையார்

பிரிண்ட் ஹவுஸ் மதுரை -1 ✆ 74 60 64